வியாபார பகிஷ்காரத்தின் மூலம் சோ.யூ.வைத் தனிமைப்படுத்தி விடலாம் எனக் கனவு கண்ட அமெரிக்க ஏகாதிபத்தியத்தின் எண்ணத்தில் மண் விழுந்துள்ளது. இதே நிலையில் ஜனநாயக கொள்கையுள்ள மற்ற தேசங்களின் அன்னிய வியாபாரமும் அதிகரித்துள்ளது. இந்நாடுகள் சோஷலிச உலகின் எல்லாத உதவியுமின்றி, சுயமாகவே பரிபூரணமாகத் தங்களது சுய தேவைகளைப் பூர்த்திச் செய்து கொள்ளுமளவுக்கு நெருங்கிய ஒத்துழைப்பும், பொருளாதார வளர்ச்சியும் அடைந்துள்ளன.** அமெரிக்காவின் உதவி போன்றதல்ல: ஜனநாயக உலக மார்க்கெட்டின் பொருளாதார வளர்ச்சிக்கு சோ.யூ. தொழில் துறையில் பின் தங்கிய நிலையிலுள்ள நாடுகளுக்கு எந்த மாதிரியான உதவியை அளிக்கிறது? இந்தியா போன்ற பின் தங்கிய நாடுகளுக்கு அமெரிக்காவும், பிரிட்டனும் அளிக்கின்றனவே உதவி அது போன்றதா? இல்லை, லிப்ஸ்டிக்கையும்; டாய்லெட் சோப்பையும்; துணிமணிகளையும் சைக்கிளையும், மோட்டாரையும் ஏற்றுமதி செய்து நமது கேந்திர மூலப் பொருள்களையும் செல்வத்தையும் கொள்ளையடித்துக் கொண்டு போகின்றனரே ஆங்கிலோ அமெரிக்க ஏகாதிபத்திய ஏகபோக முதலாளிகள்! நமக்கு அபிவிருத்தித் திட்டமென்று சொல்லிக் கொண்டு கிராம புறங்களில் நமது பொருளாதார அமைப்பை அமெரிக்கச் சாண்டர் கூட்டம் ஊடுருவ அனுமதிக்கப்படுகிறதே! அது போன்ற தொடர்பா? இல்லை நம் நாட்டில் அமெரிக்க எண்ணெய் கம்பெனிகள் இந்நாட்டின் எந்தச் சட்டமும் கட்டுப்படுத்தாமல் சுரண்டிக் கொள்ளையடிக்க அனுமதிக்கப்பட்டிருக்கிறதே! தொழில் வளர்ச்சியில் பின்தங்கிய நாடாகவே என்றென்றும் இருக்க இப்படி செய்ய நமக்கு கேந்திரத் தொழில் யந்திரங்களைக் கொடுத்துதவ ஆங்கிலோ அமெரிக்க ஏகாதிபத்தியம் மறுக்கின்றதே! அது போன்றதல்ல சோ.யூ. மற்ற ஜனநாயக நாடுகளுக்கு அளிக்கும் உதவியும், அந்நாடுகளுடன் கொண்டுள்ள பொருளாதாரத் தொடர்பும்.* ஜனநாயக கொள்கை உள்ள நாடுகளுக்கு மிகப் பெரும் கனயந்திரத் தொழிற்சாலைகளைக் கட்ட உதவும் யந்திரத் தொழில் சாமான்களை சோ.யூ. அனுப்பி வருகிறது. உலோக உற்பத்தி யந்திரங்கள், ரசாயன உற்பத்தி யந்திரங்கள், மருத்துவ யந்திரங்கள் போன்ற யந்திரங்களையும், இவ்வித யந்திரங்களையே உற்பத்தி செய்யும் கனயந்திரங்களையும் சோ.யூ., மக்கள் ஜனநாயக நாடுகளுக்கு அனுப்புகிறது. 1948 வருஷத்தில் அனுப்பியது போல் 1952ல் ஏழு மடங்கு அதிகரித்துள்ளது. இதற்குமுன் அபரிமிதமான எண்ணெய் உற்பத்தி செய்யும் ருமேனியா தேசத்தில் எண்ணெய் சுத்திகரிக்கும் யந்திரம் உற்பத்தி செய்யும் தொழிலே கிடையாது. இன்று சோ.யூ. உதவியால் பெரிய எண்ணெய் சுத்திகரிப்பு யந்திரங்களை உற்பத்தி செய்யும் யந்திரசாலை ஒன்று ருமேனியாவில் அமைக்கப்பட்டுள்ளது.* இவ்விதமான பொருளாதார உறவுகளைக் கொண்டு இன்று தோன்றியுள்ள புதிய ஜனநாயக உலக மார்க்கெட். இதில் சம்பந்தப்பட்ட தேசங்கள் பரஸ்பரமாக ஒன்றோடொன்று இந்நாட்டு மக்களுக்கு சுபிட்ச வாழ்வைத் தேடித் தோழமை உதவுவதுதான் இப்புதிய மார்க்கெட்டிற்கு அடிப்படையாக உள்ள தத்துவம்.** 2. முதலாளித்துவ மார்க்கெட்: இரண்டாவது உலக யுத்தத்திற்குப் பின் உலகமெங்கும் வியாபாரத்திலிருந்த முதலாளித்துவ மார்க்கெட் இன்றில்லை. முதலாளித்துவ கோமன் எல்லைகள் சுருங்கி விட்டது போல, அதன் மார்க்கெட்டும் சுருங்கி விட்டது. இன்று முதலாளித்துவ நாடுகள் அனைத்தும் மிகக் கோரமான வாதத்தில் அகப்பட்டுள்ளன. மார்க்கெட்டுகளுக்காகவும், மூலப்பொருள்களுக்காகவும், மூலதனத்தை ஈண்டுதற்கான இட வசதிகளுக்காகவும் ஏகபோக முதலாளித்துவ கும்பல்களிடையே ஒருவர் மேல்விழுந்து ஒருவர் பறித்து நாசம் செய்யும் வாதத்தில் போட்டி வலுத்து விட்டது. இத்துடன் பொருளாதார நெருக்கடியும், அதனால் உற்பத்தியால் ஏற்படும் தடங்கல்களும், அத்தேசங்களின் பொருளாதார அமைப்பு ராணுவ மயமாக்கப்படுவதும், தொடர்ந்த அதிகரித்த வேலையில்லாத் திண்டாட்டமும், பெரும்பான்மை மக்களின் வறுமையும் அத்தேசங்களின் உள்நாட்டு வியாபாரத்தையும் வெளிநாட்டு வியாபாரத்தையும் சுருக்கி விட்டன.* இவ்வாறு இத்திலும் ஒரு முதலாளித்துவ தேசம் மற்றொரு தேசத்தைச் சுரண்டி நாசமாக்குவதின் மூலம் தான் வளரமுடியும். இரண்டாவது யுத்த காலத்தில் கொள்ளையடித்துக் கொழுத்த பெருத்த அ. ஏகாதிபத்தியம் இதே வேலையைத்தான் இன்று செய்து வருகிறது.